கன்னியாகுமரி

# ஸ்தல மகிமை



வெளியிடுவோர்:—

**வி. கோவிந்த ஐயர்,**

வியாபாரம், கன்னியாகுமரி.

விலை அண

32/1



இந் நாட்டின் எல்லையதை காத்து நின்று
எந் நாளும் மக்கள் நலம் பேண வேண்டி
பொன்னனைத் தவக்கோலம் பூண்டு விட்ட,
புண்ணியத் தாய் குமரி யருள் சுரந்து காப்பாள்!



# குமரியம்பதியின் சிறப்பு.



அகில உலகிற்கும் அணியெனத் திகழும் நம் பாரத நாட்டின் தெற்கெல்லையாய் விளங்கும் இத்திரு நகர், கிழக்கே வங்காளக்குடாக் கடலாலும், தெற்கே இந்து மகா சமுத்திரத்தாலும், மேற்கே அரபிக்கடலாலும் சூழப் பட்டிருக்கிறது.

முற்காலத்தில் குமரி முதல் இமயம் வரையுள்ள இப் பரந்த நாட்டை **பரதன்** என்போன் ஆண்டு வந்தான். அவ்வரசனுக்கு எட்டுப் புதல்வர்களும், குமரி என்னும் ஓர் புதல்வியும் இருந்தாள். இம்மக்கள் ஒன்பதின் மருக்கும் பாரத கண்டத்தை ஒன்பது பாகங்களாகப் பிரித்து அரசாண்டு வரும்படி அரசன் ஏற்பாடு செய்தான். அவற்



இந் நாட்டின் எல்லையதை காத்து நின்று
எந் நாளும் மக்கள் நலம் பேண வேண்டி
பொன்னனைத் தவக்கோலம் பூண்டு விட்ட,
புண்ணியத் தாய் குமரி யருள் சுரந்து காப்பாள்!



# குமரியம்பதியின் சிறப்பு.



அகில உலகிற்கும் அணியெனத் திகழும் நம் பாரத நாட்டின் தெற்கெல்லையாய் விளங்கும் இத்திரு நகர், கிழக்கே வங்காளக்குடாக் கடலாலும், தெற்கே இந்து மகா சமுத்திரத்தாலும், மேற்கே அரபிக்கடலாலும் சூழப் பட்டிருக்கிறது.

முற்காலத்தில் குமரி முதல் இமயம் வரையுள்ள இப் பரத நாட்டை பரதன் என்போன் ஆண்டு வந்தான். அவ்வரசனுக்கு எட்டுப் புதல்வர்களும், குமரி என்னும் ஓர் புதல்வியும் இருந்தாள். இம்மக்கள் ஒன்பதின் மருக்கும் பரத கண்டத்தை ஒன்பது பாகங்களாகப் பிரித்து அரசாண்டு வரும்படி அரசன் ஏற்பாடு செய்தான். அவற்

துள் தென்பாகத்தை குமரி என்பவள் அரசாண்டு வந்ததால் இந்நாட்டிற்கு "குமரிநாடு" என்றும், இத்தலத்திற்கு "குமரியம்பதி" என்றும் பெயர் வரலாயிற்று சக்தியானவள் கன்னியாயிருந்து தவம் செய்வதால் இத்தலத்திற்கு கன்னியாகுமரி என்று பெயர் வந்தது. முப்புறம் கடலால் சூழப்பட்டு மற்றோர் புறம் தரையோடு இணைந்து கடலிலே நீண்டு ஒடுங்கி கிடப்பதால் பூமிநூல் விதிப்படி இதை குமரிமுனை எனவும் அழைப்பார்.

## கோவில் அமைப்பு

இத்திருநகரில் கன்னி நாயகி எழுந்தருளியிருக்கும் இவ்வாலயமானது பலநூற்றாண்டுகளுக்கு முன்பரசுராமரால் பிரதிஷ்டைச் செய்யப்பட்டு பின் இந்நகரை அரசாண்ட அரசர்களால் இக்கோயில் கட்டப்பட்டமைக்கு கோயிலிலுள்ள கல்வெட்டுகளே சான்றாகும்.

## இத்தலத் தீர்த்த மகிமை.

இத்தலத்திலுள்ள தீர்த்தங்களின் மகிமையை அறிந்த, சாஸ்திரங்களை உணர்ந்த, பெரியோர்கள் இவ்வண் வந்து, இத்தீர்த்தங்களில் வேத விதிப்படி நீராடி பிதுர்களுக்குச் செய்ய வேண்டிய பிதுர் கர்மாதிகள் செய்து பின் பராசக்தியின் திருவருள் பெற்றதாக புராணங்கள் கூறுகின்றன. மக்களின் பாவங்களை நீக்கி புனிதமடைந்து சொர்க்கமடையச் செய்வது அனந்த புனிதமாகிய தீர்த்தங்களேயாகும். இவ்வித இயற்கைத் தீர்த்தங்களில் காசியிலே கங்கையும், குமரியிலே கடலும் அதைச்சார்ந்த தீர்த்தங்களும் தலைச் சிறந்ததாகும். இதனாலேயே இந்துக்கள் காசியிலே கங்கையாடி கன்னியிலே கடலாடி நலம்

பெறலாம் எனக் கூறுகின்றார்கள். தீர்த்தமாடுவோர் கோவிலின் சற்றுவடக்கே அமைந்திருக்கும் பாவவிநாசனம் என்ற புஷ்கரணியில் முதல் முதலில் நீராடி பின் கடற் கரையிலுள்ள தீர்த்தத் துறைகளில் நீராடி வருவது தொன்று தொட்டேயுள்ள வழக்கமாகும். இப்பாவ விநா சனத் 'தீர்த்தமானது முன் தேவேந்திரனுக்கு கௌதம மகரிஷியின் பத்தினியான அகல்லிகையினால் ஏற்பட்ட சாபத்தை நிவிர்த்தி பண்ணிய புண்ணிய தீர்த்தமென்று புராணங்கள் கூறுகின்றன. தேவேந்திரன் இத்தீர்த்தத்தில் நீராடி பராசக்தியைத் தொழுத உடன் அவரது யோனிக் கண்கள் மாறியதாக தெரிய வருகிறது.

குமரி கோவில் உட் பிரகாரத்தில் உள்ள விநாயகரை தேவேந்திரன் பிரதிஷ்டை செய்து பூஜித்தமையாலேயே அவ்விநாயகருக்கு இந்திரகாந்த விநாயகர் என்று பெயர் வந்ததாக வரலாறுகள் கூறுகின்றன. இவ் வரலாற்றால் தேவேந்திரன் பாவவிநாச தீர்த்தத்தில் நீராடி பாவம் நீங் கினான் என்பது தெளிவாய் விளங்குகிறது. இப்பாவவிநாச தீர்த்தத்திற்கு மண்டுகத் தீர்த்தமென்று மற்றோர் பெயரு முண்டு.

தேவியின் சந்நிதானத்திற்குக் கீழ் திசையில் வங்கா ளக்குடாக் கடலில் சாவித்திரி, காயத்திரி, சரஸ்வதி, கன் னியா விநாயகர் முதலிய தீர்த்தங்களும், தென் திசையில் இந்துமகா சமுத்திரத்தில் கட்டப்பட்டுள்ள ஸ்தானக் கட் டிடத்தில் குமரித் துறையின் கண் சிறப்புற்று விளங்கும் மாதுர், பிதிர், பிமா முதலிய புண்ணிய தீர்த்தங்களும், மேற்குத் திசையில் சற்றுத் தூரத்திற்கு அப்பால் தாணு தீர்த்தம் என்று ஓர் தீர்த்தம் கடற்கரை ஓரத்தில் உள்ளது.

சுசீந்திரத்தில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளி யிருக்கும் ஸ்ரீ ஸ்தாணு மூர்த்திக்கு அபிஷேகம் செய்யப்படுகிற அபிஷேக நீர் இங்கு வந்து கடலோடு கலப்பதால் இதற்கு 'தாணுதீர்த்தம்' என்று பெயர் வந்ததாக பண்டு தொட்டே கூறப்பட்டு வருகின்றது.

இத்தீர்த்தங்களில் மக்கள் நியமன முறைப்படி தீர்த்தமாடிப் பின் தங்களுடைய மூதாதையர்களுக்குச் செய்ய வேண்டிய வைதீகக் கிரிகைகளை வசதியாய் நடத்துவதற்கு வேண்டி பதினாறு கால்களாலாகிய ஓர் அழகிய கல் மண்டபமும், அதன் பக்கத்தில் மக்கள் தங்கள் ஆடைகளை மாற்றுவதற்கு இரண்டு அறைகளுள்ள ஓர் கட்டிடமும் (dressing room) கட்டப் பட்டிருக்கிறது. இம் மண்டபத்தில் தான் மக்கள் தங்கள் மூதாதையர்களுக்குச் செய்யவேண்டிய வைதீகக் கருமங்களை தங்கள் தங்கள் வர்ணாசிரமத் தருமமுறைப்படிச் செய்து, மக்கள் யாக்கையால் அடைய வேண்டிய அறம், பொருள், இன்பம் என்ற மூன்றும் பெற்று, பின் பெறவேண்டிய வீடு பேற்றையும் அடைகிறார்கள்.

இத் தீர்த்தங்களில் வருஷம் தோறும் வரும் சித்திரை விஷு, சித்திரைப் பௌர்ணமி, வைகாசி விசாகம், உத்தராயன புண்ணிய காலம், ஆடி அமாவாசை, மகாலய அமாவாசை, நவராத்திரி, தக்ஷிணாயன புண்ணிய காலம், தை அமாவாசை, தைப்பூசம், சிவராத்திரி அமாவாசை, பங்குனி உத்திரம் முதலிய விசேஷ தினங்களில் எண்ணிறந்த மக்கள் கூட்டம் கூட்டமாய்க் கூடி, தீர்த்தமாடி, திருக் கோயில் வணங்கி தங்கள் இஷ்ட சித்தி அடைகிறார்கள் இத் தலத்திற்கு வருஷந்தோறும் வட இந்திய யாத்திரீகர்கள் வந்து தீர்த்தமாடி குமரி தரிசனம் செய்து வருகிறார்கள்.

# சக்தியின் வரலாறு

இந்து சாஸ்திரத்திற்கு பிரதானமானது வேதம். வேதம், ருக்கு யஜுர், சாமம், அதர்வனம் என நான்கு வகைப்படும். ரிக்கு வேதம் காசி மகாத்மியத்தைப் பற்றிக் கூறுகிறது. யஜுர் வேதம் கன்னியாகுமரி மகாத்மியத்தைப் பற்றிக் கூறுகிறது,

சோனிதபுரத்தைச் சேர்ந்த அசுர அரசனுன கசிய பிரஜாபதின் புத்திரர்களான வாணன், மூக்கன், சும்பன், மஹிஷன், முதலிய அரக்கர்களில் வாணுசுரன் கடுந்தவம் செய்து பரமனிடம் அழியாவரம்பெற்ருன். (ஆனல் கன்னி யினல் மரணமடையக்கூடாது என்ற வரம் பெறவில்லை) அவ்வரங்ககளின் மகிமையினல் அவன் தேவாதி தேவர்க ளுக்கும், முனிவர்களுக்கும், நரர்களுக்கும் துன்பம்செய்து வந்தான். அப்போது பூமியில் அசுரர்களால் துன்பம் அதிகப்பட்டு தருமம் மறைந்து, அதர்மம் ஓங்கி, பெண்கள் கற்பு நெறி கெட்டு, சத்தியம், இரக்கம், இவை இரண்டும் ஒடுங்கி, ஆலயங்களில் பூஜைகள் குறைந்து, வர்ணசிரம தருமங்களும் கெட்டன. பூமி தேவியின் வலிமை இதனல் குறைந்ததால் பிரம்மனிடம் போய் முறையிட்டாள். பிரம்மன் தன்னல் அசுரனை சம்கரிக்க முடியாது என்றும், சங்கு சக்கிரதாரியான விஷ்ணுவினல் தான் முடியும் என்றும் சொல்லி திருப்பாற் கடலில் பள்ளிகொண்ட மஹாவிஷ்ணுவினிடம் சென்ருர். அப்போது பூமி தேவியும் ஓர் பசு உருவம் எடுத்துக் கொண்டு பின் தொடர்ந்தாள். அதே சமயம் தேவர்களும் முனிவர்களும் ஒன்று சேர்ந்து வாணனின் துன்புறுத்தலை மஹாவிஷ்ணுவினிடம் முறையிட்டுக் கொண்டிருந்தார்கள்.

அதற்கு மஹாவிஷ்ணு "வர்ணனைக் கொல்வது சக்தியால் தான் முடியும், தேவர்களாகிய நீங்கள் பராசக்தியைக் குறித்து ஓர் யாகம் செய்யுங்கள். அந்த யாக அக்கினியில் உங்களது சக்தியை ஓம ஆகுதி செய்ய வேண்டும். அந்த ஓம குண்டத்திலிருந்து ஒருஜோதி பெண் உருவத்தில் வரும், அதன் மூலம் உங்களுக்கு நன்மை உண்டாகும்" என்ருர். அன்றியும் ஓம குண்டத்திலிருந்து எழும் அத்தேவிக்கு சிதக்கினி குண்டல சம்பூநா, என்ற பெயரிடும் படியும் கட்டளை யிட்டார். தேவர்கள் அப்மாதிரியே யாகம் செய்தார்கள். அதிலிருந்து பராசக்தி உற்பத்தியானுள். பின் தேவியானவள் தென் சமுத்திரத்தின் கரையில் வந்து தவம் செய்யலானுள். அப்போது தேவிக்கு மணப் பருவம் வந்ததால் திருமணத்திற்கு வேண்டிய ஏற்பாடுகள் நடந்தன. இதையறிந்த பிரம்மபுத்திரரும் திருலோகசஞ்சாரியான நாரதர், தேவிக்குக் கல்யாணம் ஆகிவிட்டால் அவளுடைய சக்தி குறைந்துவிடும் என்றும், வாணுசுர சம்காரம் நடைபெருமல் போய்விடும் என்றும் எண்ணி கல்யாணத்தை நிறுத்திவிடக்கருதி தேவியிடம்வந்து "துஷ்டநிக்ரக சிஷ்டிபரிபாலன லோகமாதாவே நீவிர் கல்யாண ஏற்பாடுகள் நடத்துவது சரியே ஆனுல் நீங்கள் அசுரர்களின் மாயசூட்சியில் அகப்பட்டுவிடாமல் நிறைவேற்ற வேண்டும். ஆதலால் உங்களை மணக்க வரும் பரமசிவனிடம் கண்ணில்லா தேங்காய், கணுவிலாக்கரும்பு, காம்பில்லா வெற்றிலே, இவைகளை பொழுது புலர்வதற்குள் கொண்டுவர வேண்டுமெனக் கட்டளை இடுங்கள். அக்கட்டளையை அவர் நிறைவேற்றுவதானுல் திருக்கல்யாணம் நடக்கட்டும்" என்ருர். உடனே தேவியும் அவ்வாறே கட்டளை யிட்டார். சிவபிரான் கட்டளைப்படியுள்ள பொருட்களை கொண்டு வருவதையறிந்த நாரதர், தான் ஒரு சேவல்

உருவம் எடுத்து சுசீந்தையிலிருந்து, குமரி முனைக்கு வரும் வழியிலுள்ள வழுக்காம்பாறை என்னும் இடத்தில் நின்று நேரிழியாக கூவினர். கோழி கூவும் சப்தத்தைக் கேட்ட பரமன் விடிகோழி கூவிவிட்டது இனிமேல் போனல் கல்யாணம் நடைபெறுதென நினைத்து அவர் சுசீந்திரத்திலேயே ஸ்தம்பித்து தாணுமூர்த்தியாய் நின்றுவிட்டார். கல்யாணமும் தடைபட்டுவிட்டது. கல்யாணத்திற்கென சேகரித்து வைத்த அரிசி பலவகை மணலாய் மாறிவிட்டது. அப்பன்னிற மணல்களை நாம் இப்பொழுதும் கன்னிக் கடலருகே கண்கூடாகக் காண்கிறோம். அன்றியும் கோவில் பிரகாரத்தில் ஒரு வார்ப்பு கல்லாய் மாறியிருப்பதையும் காணலாம்.

## வாணுசுர சம்ஹாரம்

மூன்று உலகங்களையும் அடக்கி அரசாண்டு வந்த வாணுசுரனின் வேவுகாரர்களான துன்முகன், மூக்கன், என்பவர்கள் தென் திசையில் தேவி தவம் செய்வதைக் கண்டு வாணனிடம் தேவியின் அழகை வர்ணித்தார்கள். வாணனும் மோகாந்த காரத்தில் மூழ்கி தேவியினிடம் வந்து தன்னை மணக்க வேண்டினன். அதற்கு தேவி என்னை யுத்தத்தில் வென்று கல்யாணம் செய்துகொள் என்றுள். உடனே இருவருக்கும் கடும் போர் நடந்தது. அப்போது வாணுசுரனுக்கு உதவியாக மூக்கனும் யுத்த திற்கு வந்தான். உடனே தேவியானவள் பத்திரகாளியை சிருஷ்டித்து மூக்கனுடன் யுத்தத்திற்கு அனுப்பினள். மூக்கன் பத்திரகாளியை தூக்கிச் சென்றன் பத்திரகாளி அவனை மூகாம்பிகை என்னும் இடத்தில் வைத்து சம்ஹாரம் செய்தாள். அந்த இடத்தில் இன்றும் அடையாளமாக ஓர் சூலம் இருக்கிறது. பின் தேவியானவள் வாணதீர்த்தம்

என்னும் இடத்தில் வைத்து மாயாவியான வாணுசுரனை சம்ஹாரம் செய்தாள். அப்போது தேவர்கள் புஷ்பமாரி பொழிந்தார்கள். வாணன் இறக்கும் தருவாயில் "அண்ட பிண்ட சராசரங்களை ஈன்றெடுத்த தாயே! என் அபசாரத்தை பொறுத்து எனக்கு நற்கதியடைய அருள் புரிய வேண்டும், அன்றியும் நான் இறக்கும் இடத்தில் ஓர் புண்ணிய தீர்த்த கட்டம் உண்டு பண்ணி அதில் நீராடுபவர்களுக்கு கங்கை நீராடிய பலன் உண்டாகும்படி அருள் புரிய வேண்டுமென பிரார்த்தித்தான்." தேவியும் அவ்வாறே செய்வதாய் அருள் புரிந்து அவன் இறந்த இடத்திற்கு வாணதீர்த்தம் (பாணதீர்த்தம்) என்னும் ஓர் தீர்த்த கட்டத்தை ஏற்படுத்தி அதில் வருடந்தோறும் ஆடி அமாவாசைக்கு வந்து ஸ்நானம் செய்து பிதூர் கர்மங்களை செய்பவர்கள் கங்கா ஸ்நான பலனடைந்து நற்கதி அடைவார்கள் என்று அருள் செய்தனள். தற்பொழுதும் ஆடி அமாவாசையின்போது ஏராளமான மக்கள் கூட்டம் கூட்டமாய் வந்து தீர்த்தமாடி செல்கின்றனர்

அதன் பின் தேவியானவள் இங்கு வந்து கையில் ஜெபமாலை ஏந்தி தவம் செய்கிறுள். பராசக்தியின் தோழியாகிய பத்திரகாளியானவள் தேவியின் திருக்கோயிலுக்கு வடக்கு பக்கத்திலுள்ள அக்கிரகாரத்தின் மத்தியில் ஓர் கோயில் கொண்டு எழுந்தருளி இருக்கின்றுள். அதன் பக்கத்திலுள்ள தீர்த்தத்திற்கு பத்திரகாளி தீர்த்தம் என்று பெயர் தேவியின் கோயிலுக்குள் பூஜாவிதிக்கு வேண்டிய ஜலத்திற்காக சூலத்தினல் பாறையைக் குத்தி அதிலிருந்து உற்பத்தியான நீரையே இன்றும் தேவியின் அபிஷேகத்திற்கு தேவாலயத்தின் ஆவசியத்திற்கும் உபயோகப்படுத்துகிறுர்கள். இந்த நீரானது கங்கை தீர்த்தத்திற்கு ஒப்

யானது. இத்தண்ணீர் எடுக்கப்படும் கேணியானது பாதாள சுரங்கப் படிக்கட்டுகளால் அமையப்பெற்று, அப் படிக்கட்டின் வழியாக புரோகிதர்கள் கீழே இறங்கி, தண் ணீர் எடுத்து வரும் அதிசயம் பார்க்கப் பார்க்க நமக்கு வியப்பைக் கொடுக்கிறது.

## தேவாலய பூஜை சமயம்.

1. நாள்தோறும் காலை 5-மணிக்கு காலை சந்தி பூஜை. (தேவியின் விஸ்வரூப தெரிசனம் நிர்மாலய தரிசனம்

2. 8 மணிக்கு உதய மார்த்தாண்ட பூஜை.

3. 10 மணிக்கு மஹா அபிஷேகமும் அலங்காரமும்

4. 11-30 மணிக்கு உச்சிகால மஹா பூஜையும் தீபா ராதனையும்.

5. மாலையில் 5 மணிக்கு திருநடை திறக்கப்பட்டு 6 மணிக்கு சாயராட்சை தீபாராதனை. 6 மணி முதல் 8 மணி வரை அர்ச்சனை.

8 மணிக்குமேல் அர்த்தஜாம நிவேத்தியமும் தீபாரா தனையும்.

அதன்பின் அர்ச்சனை விக்கிரகத்தை (சீவிலி விக்கிரகத் தை) சீவிலியில் வைத்து மூன்று பிரதட்சணம் மேள தாளத்துடன் வந்துபின் ஏகாந்த தீபாராதனையுடன் தினப்பூஜை முடிகிறது. (தேவியை தபசுக்கு அனுப்பு தல்.) இங்கு ஈஸ்வரன் இல்லாததால் பள்ளியறை தீபாராதனை கிடையாது.

## கோவிலில் நாம் தேவிக்குச் செய்யக்கூடிய வழிபாடுகள்.

1: திருமதுரம்.

2. பொங்கல்.

3. பாயாசம் (சர்க்கரைப் பொங்கல்)

4. வடை அப்பம் (இரவு நேரத்தில்)

5. முழுக்காப்பு (சந்தனக்காப்பு)

6. அபிஷேகம்.

7. கன்னியா போஜனம் முதலிய வழிபாடுகளில் நாம் செய்ய விரும்பும் வழிபாடுகளைப்பற்றி தேவஸ்தானம் ஆபீசில் சென்று விபரம் அறிந்து பணம் கொடுத்து நடத்தலாம்.

இவைகள் தவிர அஷ்டோத்திரம், திரிசதை, சகஸ்ரநாம அர்ச்சனை, முதலிய அர்ச்சனைகளும் நடத்தலாம்.

இந்த தேவஸ்தானத்தின் கீழ் வேறு சில தேவாலயங்களும் உண்டு. அவைகளாவன:—

1 கிராமத்திலுள்ள ஓர் சிவன் கோவில்.

2 கன்னியம்பலத்தில் விநாயகர் கோவில்.

3 கடற்கரையில் பரசுராமரால் பிரதிஷ்டை செய்யப்பட்ட பரசுராம பிள்ளையார் கோவில்.

4 மகா தேவர் ஆலயம்.

5 வடக்கே சற்று தூரத்தில் காசி விஸ்வநாத ராலயமும், அதன் பக்கத்தில் சக்கர தீர்த்த மென்ற ஓர் தீர்த்த கட்டமும் உண்டு. இத்தீர்த்தம் புராதீனமானதும், மிக முக்கியமானதுமாகும். வாணாசுரனை சம்ஹாரம் செய்த ஆயுதமாகிய சக்கரத்தைக் கழுவி சுத்தம் செய்ததால் இதற்கு சக்கர தீர்த்த மெனப் பெயர் வந்தது.

## விழாக்கள்.

புரட்டாசி மாதம் மகாளய அமாவாசை யன்று நவராத்திரி திருவிழா ஆரம்பித்து விஜயதசமியன்று முடிவடைகிறது. நவராத்திரி திருவிழாக் காலங்களில் தேவியின் விழா விக்கிரகத்தை இரவு 8 மணிக்கு மேல் நாள் தோறும் அலங்கரிக்கப்பட்ட வாகனத்தில் எழுந்தருளச் செய்து அந்தணர்கள் வாகனத்தை சுமந்து செல்வர்.

கோயிலுக்குள்ளிருக்கும் முதல் வெளிப்பிரகாரத்தில் வாத்திய—கோஷங்கள் முழங்க, அந்தணர்கள் வேத பாராயணம் செய்ய வாகனம் மும்முறை வலம் வரும். அச்சமயத்தில் பாட்டுக் கச்சேரி முதலியவைகள் நடைபெறும். வாகனம் இறங்கியபின் அர்த்த சாம நிவேத்தியம் எடுக்கப்பட்டு தீபாராதனையும் சிவிலியும் நடைபெறும். சில விசேடச் சிறப்புகளில் கொலு மண்டபத்தில் வைத்து பாட்டுக் கச்சேரியும் கதாப் பிரசங்கங்களும் நடைபெறும். நவராத்திரியின்போது பலர் வந்து பஜன மிருப்பார்கள். (விரதம்), சரஸ்வதி பூஜையன்று கோவிலிலுள்ள எல்லா வெள்ளி வாகனங்களுக்கும் அபிஷேகம் செய்யப்பட்டு அலங்கார தீபாரதனைகள் நடைபெறும். மறுநாள் விஜய

தசமியன்று காலையில் 3½ மணிக்கே திருநடை திறக்கப் பட்டு 7½ மணிக்குள் அபிஷேகம், உச்சிகால தீபாராதனை கள் முதலியவை நடத்தியபின் திருநடை அடைக்கப்படும். அதன்பின் அம்மன் தரிசனத்திற்கு வருபவர்கள் அன்று குதிரை வாகனத்தில் (வேட்டைக்காக) அலங்கரிக்கப்பட்ட விழா விக்கிரகத்தைத் தரிசித்துப் போவார்கள்.

அன்று பகல் 2 மணிக்குமேல் மேள தாளத்துடன் அம்பாள் அம்பு போடுவதற்கு (வேட்டைக்கு) அதாவது வாணுசுரனை வதைப்பதற்கு புறப்பட்டு, நான்கு ரத வீதிகளை யும் சுற்றி திருக்கண் சாற்றப்பட்டு, இங்கிருந்து 2 மைல் தூரத்திற்கு அப்பாலுள்ள மகாதானபுரம் என்னும் கிராமத் திற்குப் பக்கத்தில் அலங்கரிக்கப்பட்டுள்ள மண்டபத்தில் எழுந்தருளி சுமார் 5½மணிக்கு அம்பு போடுதல்(வேட் டையாடுதல்)நடைபெறும். பின் அம்பாள் மகாதானபுரம் கிராமத்திற்கு எழுந்தருளி திருக்கண் முதலியவை சார்த் தப்பட்டு ரோட்டின் பக்கத்திலுள்ள காரியக்காரர் மடத் தில் அலங்கரிக்கப்பட்டுளள பந்தலில் வந்து இறங்கி, அங் கிருந்து குதிரை வாகனத்தை மாற்றி, பூம்பல்லக்கில் புறப் பட்டு இரவு பத்து மணிக்குமேல் இங்கு வந்து கோவிலின் கீழ் வாசலிலுள்ள கன்னியா தீர்த்த மண்டபத்தில் வைத்து வேத ஆகம முறைப்படி அம்பாளை கடலில் நீராட்டி, கீழ வாசல் (கிழக்கு நடை) வழியாய் கோவிலுக்குள் கொண்டு போய் சேர்ப்பதுண்டு. இத்துடன் நவராத்திரி விழா முடி வடைகிறது. இந்த விழாவை பல்வேறு இடங்களிலிருந் தும் எண்ணிறந்த மக்கள் கூட்டம் கூட்டமாக வந்து கண்டு களிக்கின்றனர். (அன்று மகாதானபுரம் கிராம சமுதாயக் கட்டிடத்தில் வைத்து கிராமத்தாரால் ஒரு கஞ்சி வார்த்தல் வைபவம் சிறப்பாக நடத்தப்பட்டு வரு கிறது.

வைகாசி மாதம் புனர் பூச நட்சத்திரத்தில் தேவிக்கு வைகாசி விழாக்கொடி ஏறுகிறது. அவ்விழாவில் நாள் தோறும் தினம் காலையிலும், மாலையிலும், இரவிலும், அம்பாளை அலங்கரிக்கப்பட்டுள்ள வாகனங்கள் நான்கு ரத வீதிகளிலும் பவனி வரும். திருவிழாத் தினங்களின் மாலையில் கோவிலின் வடக்கேயுள்ள பெரிய கட்டிடமாகிய கன்னியம்பலத்தில் வைத்து மதப்பிரசங்கங்களும், பாட்டுக் கச்சேரிகளும் நடைபெறும். 9-வது திருவிழாவன்று காலையில் ரதோ உற்சவம் நடைபெறும். மறுநாள் காலையில் கோவிலின் கீழ்வாசல் நடை திறக்கப்பட்டு அம்பாளை கடலில் நீராட்டி (ஆராட்டு) கோவிலில் சேர்ப்பார்கள். அன்று தான் வைகாசி விசாகம். விசாகத்தன்று (10 ம் திருவிழாவன்று) இரவு தெப்பத் திருவிழா அதிவிமரிசையாக நடைபெறும். அன்று இரவு ஆராட்டுடன் வைகாசி விசாகத் திருவிழா முடிவடைகிறது.

கார்த்திகை மாதம் திருக்கார்த்திகை யன்று இரவு அம்பாளை வாகனத்தில் அலங்கரித்து வாத்திய கோஷங்களுடன் நான்கு ரத வீதிகளின் வழியாய் பவனி வந்து, பின் கன்னியம்பலத்தின் அருகில் வைத்து சொக்கப்பனை தீபம் நடைபெறும். பின் கோவிலின் கீழவாசலில் வைத்து ஆராட்டு நடைபெற்று, அன்று திறக்கப்படும் கீழ வாசல் வழியாய் தேவியை கோயிலுக்குள் கொண்டு சேர்த்த லோடு கார்த்திகைத் தீபவிழா முடிவடைகிறது.

வருடத்தில், வைகாசி விசாகத் திருவிழா, நவராத்திரி பத்தாம் நாள், கார்த்திகை நாள் இம்மூன்று நாட்களிலுமே கீழவாசல் திறக்கப்படும்.

எல்லாத் தமிழ் மாத முதல் தேதிகளிலும், அமாவாசை, பௌர்ணமி முதலிய விசேஷ தினங்களிலும், கலைவாகனச் சீவிலியும் உண்டு. ஆடி மாதத்தில் பத்து தினங்கள் களபம் என்றோர் சிறு உற்சவம் நடத்தப்படும். அப்போது தேவிக்கு தந்திரியால் சந்தனுபிஷேகம் தினமும் நடைபெறும். கடைசி நாளன்று புஷ்பாபிஷேகம் நடைபெறும்.

அனேகர் தங்களுக்கு ஏற்பட்ட தேக உபாதைகள் நீங்க நீராடி நியாயப்படி பஜன விரதமிருந்து தேவியின் அருளால் தங்களது இஷ்டசித்தி அடைகிறார்கள்.

## சுசீந்திரம்.

சுசீந்திரம் என்னும் ஊர் கன்னியாகுமரியிலிருந்து நாகர்கோவிலுக்குச் செல்லும் வழியில் 8 மைல் தூரத்தில் இருக்கிறது. இங்கு ஓர் சிவாலயம் இருக்கிறது. இதற்கு ஞானவனக்ஷேத்திரம் என்னும் வேறொரு பெயர் உண்டு. இங்கு திருமூர்த்திகளும் வந்து அனுசூயாதேவியின் கற்பு நிலையை சோதிக்க பிச்சை கேட்டார்கள், உடனே பிச்சையிட ஆரம்பித்தாள். திரு மூர்த்திகளும் நீர்வாணத்துடன் தந்தால் தான் பிச்சை ஏற்பதாகக் கூறினார்கள். அனுசூயா தன் கற்பின் மகிமையால் மூவரையும் குழந்தைகளாக்கி தொட்டிலிலிட்டு தாலாட்டியதாக ஐதிகம். தேவேந்திரனுக்கு இவ்விடத்தில் வைத்தே மோக்ஷம் கிடைத்ததாகக் கூறப்படுகிறது. இக்கோவிலில் மூர்த்திகளாகிய பிரம்மா, விஷ்ணு, சிவன் முதலியவர்களுக்கு தனித்தனி இடம் அமைக்கப்பட்டிருக்கிறது. இக்கோவிலில் தினமும் நடு இரவில் தேவேந்திரன் வந்து இரவு பூஜை

செய்து வருவதாக புராணங்கள் கூறுகின்றன. இதற்கு தேவேந்திர பூஜை என்று சொல்வதுண்டு. இக்கோவிலின் பிரகாரத்தில் ஓர் பெரிய ஆஞ்சனேயர் விக்கிரகம் இருக்கிறது. இக்கோவிலில் மார்கழி மாதமும் சித்திரை மாதமும் பெரிய திருவிழாக்கள் நடைபெறும். மார்கழித்திருவிழாவை தேர் திருவிழா என்றும், சித்திரைத்திருவிழாவை தெப்பத்திருவிழா வென்றும், அழைப்பார்கள். இது புண்ணிய ஆலயங்களுள் ஒன்று. இங்கிருந்து நாகர்கோவிலுக்கு டவுண் சர்விஸ் உண்டு. மின்சார விளக்குகள் போடப்பட்டிருக்கிறது.

இத்தல புராணத்தை பக்தியுடன் படிப்பவர்களும், கேட்பவர்களும், பிறருக்கு எடுத்துரைப்பவர்களும் சகல பாவங்களும் நீக்கப் பெற்றவராய் சன்மார்க்க நெறியை அடைவார்கள்.

## பொது விஷயங்கள்

நம் இந்தியா தேசத்திலே வேறு எங்கும் காணமுடியாத சில இயற்கைக் காட்சிகளை இங்கு காணலாம். அதாவது சூரிய உதயம், சூரிய அஸ்தமனம். காலையில் சூரியன் கிழக்கே வங்காளகுடாக் கடலில் உதயமாவதும் மாலையில் மேற்கே அராபிக்கடலில் அஸ்தமிப்பதுமாகிய காட்சிப் பார்ப்பவர் மனதை பரவசப்படுத்தும்.

இதுதவிர சித்திராபௌர்ணமியன்று மாலையில் கிழக்கே சந்திரன் சமுத்திரத்தில் கொஞ்சம் கொஞ்சமாய் உதயமாவதும் மேற்கே சூரியன் கொஞ்சம் கொஞ்சமாய் மறைவதும், மறுநாள் காலையில் கிழக்கே சூரியன் உதயமாவதும் மேற்கில் சந்திரன் அஸ்தமிப்பதும், எண்ணிலடங்கா இயற்க்கை காட்சியென, கண்டு

கழித்து ஆனந்திக்க ஏராளமான ஜனங்கள் வந்துபோவார்கள். இக்கண்கூடாக் காட்சியானது இப்பூமண்டலத்தில் வேறு எங்கும் காணமுடியாது. இந்தக்கடற்கரை ஓரங்களில் சிவந்த மண்ணும், கருமண்ணும், வெள்ளையாய் அரிசிபோலுள்ள மணலும், சிப்பி, சோவி, சங்கு முதலியனவும் காணலாம். இவ்வூரின் பக்கத்தில் 4 மைல் தூரத்தில் மருத்துவாமலை (மருந்துவாழ்மலை) என்ற ஓர் மலை இருக்கிறது. அம்மலையில் பல மூலிகைகள் இருக்கின்றன. இம்மலையானது முன் ராம ராவணயுத்தத்தின்போது ஹனுமாரானவர் சஞ்சீவி மலையை எடுததுக்கொண்டு போகும் போது அதில் ஒருபாகம் சிதறி விழுந்ததாக ஓர் ஐதீகம் இம்மலையில் ஓர் கோவிலும் சுனையும் உள்ளது. இம்மலைக் காற்றானது பல ரோகங்களை போக்குவதாகவும் சொல்லப்பட்டு வருகிறது.

இவ்வூரில் கவர்மெண்டாரால் கட்டப்பட்டு நடத்தி வரும் ஓர் தர்மசத்திரம் உள்ளது. இதில் யாத்திரை வாசிகள் மூன்றுதினங்கள் வரை தாமசிக்கலாம். இங்கு சமயல் செய்வதற்கு வேண்டிய சௌகரியங்கள் இருக்கின்றன.

சர்க்காரால் நடத்தப் பட்டுவரும் கேப்ஹோட்டல், ரெஸ்டுஹவுஸ் இருக்கிறது. அதில் தனவந்தர்கள் வந்து தாமசிப்பார்கள். அதற்கு வாடகை உண்டு. அதில் எல்லாவித வசதிகளும் உண்டு.

இங்கு சில வாடகைச் சத்திரங்களும், வாடகைக் கட்டிடங்களும் தாமசிப்பதற்கு கிடைக்கும். மே, ஜூன் ஜூலை மாதங்களில் சுகவாசத்திற்காக ஏராளமான ஜனங்கள் வந்து தாமசிப்பார்கள். தற்போது இங்கு கவர்மெண்

டாரால் மின்சாரவிளக்குகள் போடப்பட்டிருக்கிறது. கூடியசீக்கிரம் தண்ணீர் வசதியும் எற்படக்கூடும். இவ்வூருக்கு சுமார் 35 வருடங்களுக்குமுன் சுவாமி விவேகானந்தர் வந்திருந்து தேவியின் அருள்பெற்று தேவியின் சன்னிதானத்திற்கெதிரே உள்ள ஸ்ரீ பாதபாறை என்ற பாறைக்கு சமுத்திரத்தில் தனது யோக சித்தியின் மூலம் நீச்சலில் அவ்விடம்போய் அன்ன ஆகாரமில்லாமல் யோகம்செய்ததாகவும் சொல்லப்படுகிறது. இங்குபொது மக்களின் ஆதரவிலும், கவர்மெண்டு ஆதரவிலும் அன்னாரின் ஞாபகார்த்தமாக விவேகானந்தர் வாசகசாலை என்ற ஓர் நிலையம் நிறுவப்பட்டிருக்கிறது.

இவ்வூரில் கவர்மெண்டாரால் நடத்தப்பட்டுவரும் ஓர் ஆஸ்பத்திரியும், ஓர் பப்ளிக்கால் டெலிபோன் ஆபீஸும் உண்டு.

இங்கு மிஷியனின் ஆதரவில் நடத்தப்பட்டு வரும் ஓர் உயர்தரப்பாடசாலையும், மிஷன்சர்ச்சும், பெண்கள் படிப்பதற்கு ஓர்காண்வென்ட் பள்ளிக்கூடமும், இரண்டு பிறைமறி பாடசாலைகளும், தேவஸ்தான போர்டாரால் நடத்தப்பட்டுவரும் தேவி குமாரி இந்துமத பாடசாலையும், மகமதியர் பள்ளியும் இருக்கிறது.

இவ்வூரிலிருந்து நேரே திருநெல்வேலி, பாபவிநாசனம் முதலிய இடங்களுக்கு பஸ் போக்கு வரவு உண்டு. இங்கிருந்து நாகர்கோவில் மூலம் எல்லா இடங்களுக்கும் பஸ் போக்கு வரவு உண்டு.

சுபம்.

# எங்களிடம்





கன்னியாகுமரி ஸ்தல மகிமை புஸ்தகங்களும், குமரிமுனை மூவர்ணப் படங்கள் அடங்கிய அழகிய ஆல்பங்களும், தேவி குமரி படங்களும் கிடைக்கும்





**வி. கோவிந்த ஐயர்,**

**வியாபாரம், கன்னியாகுமரி.**